அனையநற்றலத்தெய்திநீயன்பகத்தார்வுற்
றினிதருச்சனையியற்றிடற்பவமெலாமிரிவுற்
றுனதவானந்தவீடுபெற்றுய்குவையொப்பில்
பனவவென்றுரைத்தந்தகன்றூதர்பாற்பகர்வான். (௬௰)

இந்தவேதியன்றன்னையின்னேகொடுபோய்விட்
டந்தவேதியன்றன்னைப்பிடித்தடைதிரென்றனுப்ப
வந்தவாறவரிவனைவிட்டவனைக்கொண்டருகு
வந்தபோதூதுவரொடுமறலிசொல்வானால். (௬௧)

எல்லைபேகினவிவனையுமில்லிடைக்கொடுபோய்
வல்லைநீவிர்விட்டிவ்வயின்வம்மெனவறையச்
சொல்லைமாறலாதூதுவர்விட்டனர்விதியை
வெல்லமேதினிமீதெவர்வல்லவர்விளம்பில். (௬௨)

விடுத்துவந்தனர்தூதுவர்மேருவிற்கர்த்தி
லெடுத்தவெம்மிறையருளினாலிருவரும்பிழைத்தா
ரடுத்துவைகுழியந்தகனறைந்தவாறனைத்து
மெடுத்திசைத்தனனிவனவற்கியம்பியவேலை. (௬௩)

ஈசன்மாலயன்பூசைசெய்திடுவதற்கிதயத்
தாசையாகினனவனுமற்றவனுமங்கடைந்து
மாசிலாத்தோணிப்பெயர்மாநதிமூழ்கித்
தேசுசேருமாலயத்தைமும்முறைவலஞ்செய்தார். (௬௪)

மாலைவேலைநஞ்சுண்டவன்றனைமலரயனைச்
சீலத்தர்ச்சனைசெய்தனர்திருவடிதாழ்ந்தார்
ஞாலத்தொப்பருநற்றிருமூர்த்திகளுறையுங்
கோலக்கோத்திரியிற்றவஞ்செய்துகொண்டிருந்தார். (௬௫)

இருந்தருச்சனைநாடொறுமெழிலுறவியற்றி
வருந்துசென்மநீத்துயர்பதமெய்தியுண்மகிழ்ந்தா
ரருந்தவத்தரேதென்கயிலாயமாமசலப்
பொருந்துநற்சிறப்பின்னமும்புகலுவாங்கேட்டிர். (௬௬)

ஆக படலம் - ௰௧ க்கு திருவிருத்தம் ௭௬௪.

கோகருணப்படல் முற்றிற்று.

## ௰௨ - வது அரிச்சந்திரப்படலம்.



அரியினந்தேனுண்டார்க்குமலர்மலர்மாலைமௌலிப்
புரவலன்றிரிசங்கின்றபுத்திரன்பொய்பேசாத
திரவரிச்சந்திரன்சீர்ச்சிறுவனைத்தவஞ்செய்தீன்ற
பொருவருமொருநற்காதையினையினிப்புகலுவாமால். (௧)

வணமணியிரண்டாம்வள்ளல்வாயொராயிரம்வாய்வல்ல
பணியினியிரண்டென்றோதுபாவலோன்பாரின்மாதுக்
கணியிரண்டென்னவைகுமண்ணனுவலவைபண்டும்
பிணியிரண்டென்னவோதுமிடிகடிபெற்றிபெற்றோன். (௨)

மதியிரண்டென்னும்வெள்ளைக்கவிகையான்வானின்மேவுங்
கதிரிரண்டென்னமின்னுந்திகிரியான்கங்கையென்னு
நதியிரண்டென்னமன்னுநவைதவிர்நல்லசுத்தன்
விதியிரண்டென்னப்பன்னுமேன்மைசேர்வாய்மைமிக்கோன். (௩)

செய்யவாமேருவெற்போரிண்டெனத்திரடிண்டோளான்
வையமோம்பம்புயக்கண்வால்வலம்புரியைக்கைவை
துய்யகார்மாலிரண்டாய்ச்சுரந்தருள்புரியுந்தூயன்
வெய்யகூற்றிரண்டாமென்னும்வெங்களிறுடையவீரன். (௪)

இருவர்வேலெடுத்தகாளையெனவிளங்கெறுமெய்துற்றோ
னிருவர்வேளென்னப்பண்ணவெழின்மிகவெய்தப்பெற்றோ
னிருவராமளகையாளியெனநனிசெல்மேய்ந்தோ
னிருவராந்தேவர்கோமானெனவுலகிறைமைபூண்டோன். (௫)

வேறு.

மதிமிலைதருசடைவானவனற்றாட்
பதுமம்விடாதலர்பான்மைமனத்தா
னுகதியில்வருகதிரோன்குலமுற்றோ
னெதிருபுவிபுரியின்றவமொப்பான். (௬)

விரியொளியாணிமிர்மேதினிவான
மருவவயங்கியமன்னவன்வன்கார்

வொருவருவெங்கலிவேழமுழக்கு
மரியனையவனடைப்வர் திருவன்றான். (எ)

மறைபுகறருபலவாகியதான
நிறையழல்வேள்விதினம்புரிநீரா
னறைகடலுடைமகளகமகிழணிசேர்
நறைகமழ்புயவரிச்சந்திரநாமன். (அ)

வே று.

வொர்புலன்வென்றவையர்விழைதவமேன்மேலோங்கச்
சம்புவின்சபையட்விண்டுசமயநாடொறுஞ்சீர்சார
வர்புவியளவிலாதவளஞ்சாரந்தன்பினீயத்
தம்புதல்வரைக்காப்பாற்றுந்தாயெனத்தாலங்காத்தான். (கூ)

வே று.

இருக்குநாளெழிற்புதல்வனிரிமைபால்
வெருக்கொள்வேற்கரவேந்தர்வேந்தர்கோன்
பொருக்கெனத்திரிமூர்த்திவாழ்பொருப்
பருக்கனேர்மணியடிக்கணைந்தனன். (ய)

வந்துமாதவர்மாகர்போற்றிய
சந்தமாமலர்த்தோணித்தண்ணதி
சிந்தைமாமகிழ்சேரமூழ்கியங்
கந்தமாகநீறணிந்தன்பாகியே. (யக)

நித்தியக்கடனெறியிற்செய்தன
னுத்தமத்தெழுத்தெட்டைந்தோதினா
னத்தநல்லணியாடைநல்கினான்
மைத்தமங்குறேய்கோயின்மன்னினான். (யஉ)

அதிலெழுந்தருளாதிமாலயன்
பதுமமென்பலர்ப்பாதந்தாழ்ந்தன
னெதிரினின்றுதோத்திரமியம்பினா
னெதிரிலர்ச்சனையினிதியற்றினான். (யங)

வேறு.

ஆரணத்தாறுதப்பாதாலயம்வலமாய்வந்து
பூரணமூன்றுமூர்த்திபொன்னடிக்கமலம்போற்றி
யோரணிமகுடத்தேந்தலெண்ணருங்காலமட்டுந்
தாரணிமீதிலேதவம்புரிந்திருந்தானன்றே. (௰௪)

மாதவனமாதேர்பாகன்மலரயன்மலர்த்தாண்மீது
போதுமுப்போதுந்தூவிப்பொருவருபூசையாற்றி
மாதவமனேககாலமன்னவனுற்றநோக்கிக்
காதலுற்றான்மால்வேதாகண்ணொளிநாகினுமே. (௰௫)

கண்டகாவலன்றுண்ணென்றகைகுவித்தெழுந்துதாழ்ந்து
பண்டியாவருமபாராதபகவர்கள்பாவியேன்கண்
கொண்டுகொண்டற்கனேககோடிநாட்கோடிடாமற்
றொண்டுதானென்செய்தேனோவென்றுதோத்திரஞ்செய்வானால்.

வேறு.

மாதொர்பாகபூவின்மாதுமருவுமார்பவனசநற்
போதுவாசபூத்தல்காத்தல்போக்குமூன்றுதொழில்புரி
தீதிலாததேவர்தேவநிருக்கைமான்மழு
நாதவாழிவளைவிறண்டுநாந்தகச்கைநாரணு (௰௭)

கொன்றைசூடிதுளசிமாலைகொண்டகொண்டல்வண்ணனே
வென்றிமேவுமாகமங்களோதுநீதில்வேதனே
கன்றுகாவுதோறுமேய்த்தகண்ணமுன்னர்காலனை
வென்றபாதநால்வகைப்படைப்பியற்றும்வித்தகா. (௰அ)

ஆலமுண்டநீலகண்டவண்டரோடுகடல்சுலா
ஞாலமுண்டுமுண்டநக்கணாலைநீதுயில்பவா
பாலனண்டவந்தசண்டன்விழவுதைத்தவன்பதா
நாலுதுண்டபுத்தகக்கைநங்கைதுங்கநாதனே. (௰௯)

விதலைதுன்றவெழுமுலைபொனுமுன்மேவிவெளவுமா
முதலைகொன்றுகாத்தகத்திமுக்கணத்தமுன்னமோர்
மதலைமுன்னிருந்துசீரவாயுண்ணவருள்பவா
நிதலைநின்றகொங்கைவாணிமேசருநேரிழலனே. (உ௰)

வேறு.

என்னவன்னவரெழிற்புகழினிதெடுத்தேத்தி
மன்னன்வன்னியினைக்கெனமனங்கரைந்துருகி
மன்னுபொன்னடிவணங்கியானந்தநீர்மலர்க்கட்
டுன்னமுன்னரிதின்றிடவவரிவைசொல்வார். (௨௧)

அரசவென்பெறற்காகவிவ்வருந்தவம்புரிந்தா
யுரைசெயென்னலுமோர்மகவெனக்கினிதுவப்பாய்த்
தருதியென்னலுந்தந்தனமெனுந்ததிசம்பு
வருகமர்ந்தபார்வதியுடன்றிவையறைவானால். (௨௨)

இவர்களீசனென்றன்னையிறைஞ்சியேத்தாத
பவமதாலரவின்கடிபட்டிறப்பனென்
றுவமயேகியசாபமீந்தொல்லனமறைய
வுவகைபோகிநோக்குற்றுடனற்றவரொத்தே. (௨௩)

வருந்துதன்பொருவாறுநீத்தொப்பருமன்னன்
றிருந்துநற்றவம்பருவதச்செல்விமைநோக்கி
யிருந்துபற்பகலியற்றலுமீசனுஞ்சிவையுந்
தெரிந்துசிந்தையுண்மகிழ்வொடுதெரிசனங்கொடுப்ப. (௨௪)

கண்டுதுண்ணெனவெழுந்தனனிருகரஞ்சிரமேற்
கொண்டுபன்முறைகுதித்தனன்கொடியவெம்பவங்கள்
விண்டதென்றனன்பேம்படுகமலமெல்லடிக்கட்
டொண்டன்செய்பிழைசமிக்கெனத்தொழுதிதுசொல்வான்.

நீறுபூசியபூதியநின்மலச்சடையு
ளாறுமேவியகொன்றையுமணிதிருமுடிமே
ஞாறுஞ்சவடிநாரியேநாவிஞானுண்ஞா
தேறுமானந்தவின்பமென்மேலுமீதேனே. (௨௬)

தன்னையோர்தருதாபதரிதயதாமரைவா
ழுன்னையேயளவற்றவின்படைதிருஞான
வன்னமேபரமேசுரக்காவமர்கிளியே
மன்னுவேதவன்கோகிலமேமயிலேமகளே. (௨௭)

விண்டலத்தரசற்கரசருள்புரிவேற்கைக்
கொண்டசண்முகக்குமாரனைப்பெற்றபொற்கொடியே
பண்டைநல்லமுதச்சுவைசெறிதருபனுவல்
விண்டவித்தவசனர்பெறுமிளிர்நவநிதியே. (௨௮)

மீனுலாவியவேலைசூழ்மேதினிவிளங்கக்
கானுலாவியசோலைசேரிமயமால்வரைக்கட்
டேனுலாவியகொன்றையான்றிருக்கரம்பிடித்த
மானேநேர்விழியாயறமுழுவதும்வளர்த்தோய். (௨௯)

என்றுதோத்திரஞ்செய்திணையடிவிழுந்தெழுந்து
நின்றுபார்த்தவனிருகரங்களைக்குவித்துக்
குன்றெனுத்திகழ்தோளுளகுரிசிலுட்குழைந்து
தன்றனுக்குழறச்சிலைவக்கிவைபுகறருவான். (௩௰)

மின்னினீள்சடையானொடுவிமலைநீள்விடைமேன்
மன்னிமேவியவடிவுகண்டுவகைவாரியில்வீழ்ந்
தின்னதாவியற்றுவதெனவறிதராதிருந்தே
னுன்னையேசினேனலன்றுளுத்தியையொப்பாய். (௩௧)

எவ்வுயிர்க்குமோரன்னையாநீமுனிவெய்திற்
செவ்விதிற்புகலெவ்வழிசேய்பிழைசெய்யி
லவ்வைநல்லருள்செய்வதன்றோகடனண்டங்
கௌவுதண்பனிமாமலைவந்தகாரணியே (௩௨)

உதவுபுத்திரனூறகன்றன்கிருபையினு
லிதம்வந்துய்ந்திடவினிவாமீதியென்றேந்தல்
பதபலர்த்துணைபணிதலும்பார்வதிமகிழ்வா
யிதனையன்னவனுநநோக்கியங்கிசைப்பாள். (௩௩)

யானிசைத்திடுசாபம்பொய்யாமலந்தம்வந்
தீனமின்றியுய்ந்தினிதுலகரசுசெய்திருப்பான்
றேனிசைத்திடுதெரியலாய்தெரிகெனத்திருவாய்ப்
பானிலைப்படுபண்மொழிப்பார்வதிபகர. (௩௪)

கேட்டமன்னவனிருதயமகிழ்வுமீக்கொழமத்
தாட்டுணைச்சரோருகம்விழுந்தெழுந்துசாம்பவியே

பேட்டிமைப்பராசரூபப்பெயர்வெள்ளித்
தேட்டமெற்குளசெயவருட்செய்யெனச்செய்து. (௧௫)

அந்தரத்திடைமறைதனுமவர்திருவடியைச்
சிந்தையிற்றுதிசெய்துசெங்கோலுளசெம்மல்
வந்துநன்னெறிமல்கியவயோத்திமாநகரஞ்
சந்தமுற்றினிதாளுகைபுரிதருநாளில். (௧௬)

சப்புவின்டயனென்பவர்தாமரைத்துணைத்தா
ணம்பிநற்றவம்பூசனைநடாத்தியநலத்தா
லம்பொனின்வரைவில்லிதனக்கினியக்க
கம்பியொத்தமைந்தமையொருநந்தனற்பெற்றான். (௧௭)

திக்குவெற்றிகொண்டொப்பருபொன்மழைசிதறி
மிக்கபொற்பமைமாசரூபப்பெயர்வேள்வி
தக்கபுண்ணியர்சாற்றுசொற்றப்பறவாற்றி
மைக்கனன்றிருமாலயன்வாழ்பதமடைந்தான். (௧௮)

இசைசெயிவ்வரிச்சந்திரனெழிற்கதையிசைத்தோர்
நசையினிற்செவிசாற்றினர்நல்லபுத்திரரும்
வசையிகந்துபர்வாய்மையுமாசுமாவளமுந்
திசைகடந்தசீர்த்தியுமடைந்துயர்கதிசேர்வார். (௧௯)

ஆக படலம் ௪௨-க்கு திருவிருத்தம் ௮௰௯.
அரிச்சந்திரபடல முற்றிற்று.

## ௰௧-வது நளப்படலம்.



ஒலியெழிற்கழற்கால்வைவேலுடையவோராசன்முன்னாண்
மலிகடனஞ்சமுண்டோன்மாலயன்மகிழ்ந்துவைகிப்
பொலிதிரிமூர்த்திவெற்புப்புக்குத்தன்பொற்புப்போக்குங்
கலிதொலைந்துய்ந்தசீரார்கதையினிக்கழறுசிற்பாம். (௧)

வேதநூலெல்லாங்கற்றுமேன்மைசேர்வசிட்டனென்போற்
காதலாற்காமதேனுவினையளிக்காமல்விட்டோன்

ஸ்ரீதிலாத்தேவர்கோமாற்கென்பதுசேர்தலாலே
சோதிசேர்மணியேற்போர்க்குககொடுத்திடாதொழிந்ததூயோன்.

உனனமெய்பதுசற்றேனுமுறுமறைவாணரொண்கைத்
தானந்தந்திடுகாற்றத்தசலங்கொடுசலதிசெய்தோன்
கானமவெங்கலிக்குந்தந்துகருதலரானோர்க்கெல்லாம்
வானந்தந்தவனூர்கல்விவல்லவர்க்கொல்லையீந்தோன். (௩)

மறையுரையாறுமாறுமண்மகமெல்லாஞ்செய்தோன்
பொறைதிரள்புயத்தின்மீதுபூதலம்பொறப்பவைத்தோன்
செறிமதகயத்தான்வீரசேனனற்றவத்துச்செல்வ
னிறைமதிக்குலமேமேலோங்கிநிலைபெறவந்தசெம்மல். (௪)

வளையினந்தராளமீனும்வயல்வளைநிடதநாட
ருளமகிழ்புகழான்வீமனுகனியபுதல்வியாகத்
திளமுலையழுந்தமாலையிழிபிழிநளைந்தமேதாள
னளனெனவுலகமெல்லாநடந்தநன்னாமதேயன். (௫)

அறம்பொறைவாய்மையீரமாண்மையாசாரமேன்மை
சிறந்தசீர்கருணையீகைசெவ்விநன்னிலைமைசீர்த்தி
நிறைந்தமாதவநன்னீதிநிகாருமறிவுமொன்றாய்ச்
செறிந்தொருவடிவுகொண்டுசெகதலத்துதித்ததொப்பான். (௬)

புவிபுரந்திருக்குநாளிற்புட்கரத்திறைவனோடு
மவையிடைவெஞ்சூதாடியணிநகராசுதானை
யுவமையில்கலியானொடுமொண்ணிதியுந்தோற்றாய்
நவையகன்மனைவியொடுநனியழல்வனம்போனானல். (௭)

கலிவனத்தேகவையங்காத்தகாவலன்றானந்நாட்
கலிவனத்திவனையோட்டமனையொடுங்காட்டிற்போனான்
பொலிவெள்சத்துவட்டப்பூவணைப்போதற்கேனுந்
தலைமனுமூழ்மாற்றற்காந்தருக்கொருக்காலுமுண்டோ. (௮)

பொன்னுயர்பொறிபோற்றேமற்பூத்தபூண்முலையாளோடு
மன்னனைவன்னிக்காட்டில்வன்கலிதுரத்துதோற்றந்
தன்னைமுன்றழற்கானோட்டுந்தன்மையைநாடித்தானவ்
வின்னலையனோனெய்தவிழைத்ததொத்திருந்ததன்றே. (௯)

வாரறப்பிறிவீறிவருமுலைமனைவியோடத்
தேரணிச்சேனைவேந்தன்றிப்பியநீருமின்றி
நேருபசியானொந்துநெஞ்சுநாவீரமற்றங்
காரனாரடைந்துசின்னாளடவிவாயலைந்தானம்பா. (௰)

வனத்திலிவ்வாறுவைகுமன்னனோர்நாளிராவிற்
றனித்தபாழ்ங்கோயிலெய்தித்தமயந்திதுயில்செய்காலை
யினித்தநியிதுபோற்கிட்டாதென்றகன்றொல்லைபோனா
னினித்தநல்லாவிதேகத்தினையகன்றேகிற்றென்ன. (௰௧)

அல்லிடையாளியன்னவாசன்விட்டகன்றுபோக
மெல்லியறனியளாகிவிழிவழிவிழுநீர்மாரி
வல்லைவென்முலைமேல்வாரமகிழ்நனைத்தேடிவாடி
வில்லுழையம்புதைத்தமென்மறிபோலச்சோர்ந்தாள். (௰௨)

வாடியுண்ணைந்துதேங்கிமயங்கினடியங்கிக்காணி
னாடினளுடலமெல்லாநடுங்கிவெய்துயிர்த்தாளல்லி
லோடினளிரங்கிவெம்பியுள்ளுயிர்ப்பொடுங்கிச்சோர்ந்து
வீடினளென்னப்பன்னவிழுந்தறிவிழந்தாளன்றே. (௰௩)

இறந்திடும்விதிவந்தெய்தாவியல்பினாலாவிமீளப்
பிறந்துவந்தெழுந்துசோர்ந்துபெய்வளைதேகத்தேசு
நிறைந்தநெய்முற்றுமற்றுநின்றபொற்றீபமென்ன
வறந்துபன்னனைக்காணாளாய்வாய்திறந்தரற்றலுற்றாள். (௰௪)

வேறு.

புலியுமரியுமுறவாகப்புவிபுரந்த
மலியும்விரீகிவயனிடதவளநாட
நலியுமல்வனத்தினாரிதனைத்தனிவிட்டு
விலகலலகமைவேல்வேந்தர்க்கறனேயோ. (௰௫)

துரியார்தமையடைக்கத்தான்விடுக்குந்தழற்கடத்திற்
பிரியாப்பிரியமுளபேதைதனைத்தனிவிடுதல்
பெருவாரிதியுலகுகாக்கும்பெருமானுக்
கருளாவதவழகாவரசாறத்தாறீதா. (௰௬)

உன்னேரிலன்புதுணையாயுடையவடியாளைத்
தன்னேரிலாததழற்கானிற்றனிப்படநீத்
தின்னேரத்திடையிரவிலேகமனந்துணிவான
மன்னேயெற்காகவினுஞ்செய்வதெதுவாலதுண்டோ. (௧௭)

மண்ணைக்குலமுமுறங்குமயங்கிருள்வா
யெண்ணணின்மிருகவினங்களியங்குங்காட்டோர்
பெண்ணையழுகவிடுவான்பெரிதடியேன்
பண்ணுபிழைகள்பெரிதேதோபார்வேந்தே. (௧௮)

வேறு.

பாவையிப்படிவாய்திறந்தாற்றிடப்பார்த்த
காவும்வெவ்வியகற்களுங்ககங்களுங்கடின
மாவும்வன்பணைமரங்களுங்காங்கெழுவளவின்
மேவும்வெங்கொலைமாக்களுமிரக்கம்விஞ்சினவால். (௧௯)

இனையவாறழுதேங்கியதமயந்தியிருள்வாய்த்
தனியளாய்த்திரிந்தாழ்வ்வியாலருடாதை
இனியமாநகரெய்தியங்கிவைபுகன்றினைந்தாள்
வனமுலாவியகடல்கவிழ்கலங்கரைவரல்போல். (௨௰)

அளித்ததந்தைதாயாற்றிடவொருசிறிதாறி
யிளைத்ததுண்ணிடையேந்தலையென்றுகாண்பேனென்
றுளத்திலுன்னியங்குறைந்தனளொண்மழையும்பார்க்
கிளைத்தெழுந்திடனுக்கியகேகயமென்ன. (௨௧)

பாவையைப்பிரிந்தேகியபுரவலன்பலகான்
மேவிவெங்கலிதொடர்ந்திடவலைந்துமுன்வினையாற்
றேவரஞ்சலிசெய்திரிமூர்த்திவெற்பருகு
போவதென்பதாம்புண்ணியம்பொருந்தவந்ததுவே (௨௨)

பொருவின்மன்னவன்மூவர்கள்வாழதிருப்பொருப்பை
மருவவந்துழிபின்றொடர்வன்கலிவலிபோய்
வெருவிநின்றிடாதோடினவடதிசைவேந்த
னுரியவொண்முகநோக்கினோர்வறுமையையொத்தே. (௨௩)

தீபவான்கலிசேர்தராத்தென்கயிலாயங்
தூயவேந்தர்கோன்றன்னனுங்கலிதொலைந்தோடச்
சேயமாபலர்த்தோணிநற்றீர்த்தத்திலாடி
யாயுநான்முறைநீறணிந்தைந்தெழுத்தோதி. (௨௪)

வெற்பின்மேவியமூவரைவேதநூல்விதியி
னற்பினுருமாராதனையாற்றினனசுத்தப்
பற்றுபாசவல்லிருளறுத்தவரடிபணிந்து
முற்றுருதமும்மூர்த்திகள்புகழ்மொழிவானுன். (௨௫)

காலனைக்கழற்காலினாலுதைத்தடிமைக்கொள்
பாலனுமார்க்கண்டனைப்பாலனம்புரிந்த
சீலமூவிலைச்சூலமான்மழுவெழிற்செங்கைக்
கோலகோமளபார்வதிகொழுநனேபோற்றி. (௨௬)

வேறு.

சததளக்கமலக்கோயிற்றனிலுறைதையல்கொங்கை
மதமலைக்களிறுபாயவண்டுளவணிவிண்டொண்டே
னெதிரறவொழுகுமார்பனிலங்கைமன்சிரங்கள்பத்துங்
கதிருறுகணையாற்கொய்தகாகுத்தபோற்றிபோற்றி. (௨௭)

இருசிறைவரிப்புட்டேனுண்டிசைசெயும்வனசவில்லின்
மருவியவெண்டோளுன்குவத்திரவாணிவைகும்
பொருவருகானுமேவப்புண்ணியபுவனமூன்றுந்
தருபவதிருமாலுபிச்சம்பவபோற்றிபோற்றி. (௨௮)

என்றிவர்தம்மையேத்தியெழிலுறவலமாய்வந்து
நின்றுழியளவிலாதவரமெலாநீட்டநேர்ந்து
தன்றிருத்தேவிநாடுசம்பத்துமுழுதுந்தன்கை
யொன்றியொண்ணிடதமெய்தியுவகையுற்றிருந்தான்மன்னே. (௨௯)

ஆதுநாடடிகள்வாரத்தட்டமிமாசிமாதத்
தோதுதோணிப்போற்றிலுற்றுநான்முறையினுடிப்
போதன்மால்சிவனுமூவர்பூசனைபுரிவாராகில்
வாதைநோயாவமோடிவாமநீங்கிடும்மன்மாகே. (௩௰)

வெய்யவாங்கலியின்வாதைமேவுறார்விழைந்தநெஞ்சி
லெய்துவார்மல்லற்செல்வமெல்லவும்வல்லைசேர்வார்
வையமேல்வானமேல்வைகுவாரெலாமகிழ்ந்துவாழ்த்தப்
பொய்யிலாமூவர்மூவில்பொற்பதமபொருந்திவாழ்வார். (௩௧)

ஆ படலம் - ௰௨ க்கு திருவிருத்தம் ௭௬௫.

நளப்படல முற்றிற்று.



## ௰௪ - வது முசுகுந்தன்முகம்பெற்ற படலம்.



வட்டவாய்த்தளக்கமலைக்கள்ளுண்டவரிவண்டி
னிட்டமாந்தீஞ்சுவைப்பாட்டெத்திசையுமெழும்பொய்கை
மட்டிலாப்பொழிற்கலிங்கமாதேயத்தொருமறையோன்
விட்டிடாதரியரன்வேதாபூசைவிதிபுரிவான். (௧)

வேதமுழுவதுமுணர்ந்தோன்வேதமுடிக்கெட்டாத
போதனரன்மாலிவர்கள்பொற்கழற்சேவடிமறவா
னேகரியமாதவத்தாலவன்மனைவியுதரமதி
லேதமறவொருபுதல்வியினிதினவதரித்தாளால். (௨)

சந்தமுறச்சடங்கனைத்துங்காலுற்றிச்சற்குணமே
சொந்தமுறவருசுதையைச்சுகுமாரியெனவழைத்தான்
முந்தவருநல்வினையின்முளைபோலவளர்போது
புந்திபுகுமடமகற்றும்பூருவபுண்ணியம்புகுத. (௩)

தக்காறிதல்லவெனச்சகத்தினர்தம்வாழ்க்கைதனை
நக்கிராமுமிரட்டிநண்ணியதத்துவநவைக
டொக்காமன்மும்மூர்த்திதூப்பூசனைபுரிய
மிக்கார்வமாய்த்தாதைதாடொழுதுவினவினளால். (௪)

மறுத்துமளற்றழுந்தாமந்திரவதிகாரம்வழங்கிச்
செறிக்ககனுக்கரும்புநுனிதொட்டருந்துதிறத்தளித்துப்
பறித்தமலரருச்சனைசெயதிகாரம்பரிந்தருள
நெறித்தகுழற்சுகுமாரிநித்தியமப்பணிபுரிவாள். (௫)

வேறு.

திரைக்கடன்முகட்டிற்றினமணியுதயஞ்சேர்வதைதக்குடிலைசாயிலென
[ழுந்து
பொருக்கெனத்தேகசுத்திசெய்தப்பாற்புண்ணியநீற்றணிபொருந்தி
வருத்துறுபாவமுழுவதுமகற்றுமாலரணயனைமாமனத்தி
லிருத்தியிலகன்றமலசலவிசர்க்கமியற்றிப்பல்லினிதினில்விளக்கி.

வாசனைமுசுமலர்த்தடத்தாடிமகிழ்ந்துவெண்ணீறுடல்வயக்கித்
தேசடைநந்தவனத்தினிற்றனதுதிருக்கரப்பிடகையோடேகிப்
பேசெழிலலரிநந்தியாவட்டம்பிண்டிபாதிரிவனமுலைகுளம்
பாசிலைச்செருந்திஞாழன்மந்தாரைபருத்திகூதாளஞ்செம்பரத்தை.

பொன்னிறக்கடுக்கைகொன்றைவெட்பாலைபுன்னைசெவ்வகத்திபூ
[வேங்கை
நன்னிறக்காஞ்சிகொக்குமந்தாரைநரவல்பொன்றுவிரைவெட்சி
பன்னியமத்தைமாதுளைபெருக்குப்பகர்சிறுதும்பைபன்னீர்ப்பூ
வன்னிசெவ்வந்திதுளசிகாக்கணம்பூமாணிறமலர்திருவாத்தி. (௮)

கரியசிற்றகத்திகருவிளைவெள்ளைக்காசைசெங்கிடைநீர்முள்ளி
புரசுநற்றருப்பைகுராமராதாளிபூகங்கோட்டஞ்சதகுப்பை
மருதிருவேலிவழுதுணைகண்டங்கத்திரியறுகுபானிலிங்கு
பரிதியின்காந்திபச்சைநாரத்தைபாரிசாதம்புலிதொடக்கி. (௯)

மாதவிமுல்லைமல்லிகைமயிலைமாலதிமருமருக்கொழுந்து
மேதகுசங்கவர்த்தனங்கிழுவைவெள்ளிறண்ணீர்மிட்டாணெல்லி
போதலர்நொச்சிகுச்சிப்புலுச்சிப்புல்கொட்டைக்கரந்தைநற்கரந்
தீதருவெட்டிவேரிலாமிச்சுசெவ்வியகாந்தணையுருவி. [தை (௰)

எண்மலர்குமுகமோரிதழ்க்கஞ்சமிலங்கைசந்தனங்கருங்காலி
கண்மலர்கமலமிலிகுசம்வாகைகாரைவெண்மலர்மஞ்சணத்தி
யொண்மலர்க்கூத்தங்குதம்பைவெண்பூளையுய்யாலர்குவளைநாணற்பூ
தண்மலர்கடம்புபூகமேறழிஞ்சிதான்றிதாம்பூலநெற்பயிரே. (௧௧)

வேறு.

உருவுதிகழொண்குழையணிசேடியரோடோதுமலர்கொய்து
மருவுகரத்துப்பிடகைநிறைவாகச்செய்துமனையெய்திப்

பொருவில்பரமசிவன் றிருமால்போகனென்னப்புகல்பெயர்பெற்
றுருவுமருவுமிலாதவரார்ச்சனைசெய்தமருநாளொருநாள். (௰௨)

நற்றேன்றாற்றுந்திருப்பள்ளித்தாமங்கொய்யநாளுறு
முற்றுற்போலவுய்யானமுற்றசுகுமாரியைநோக்கி
முற்றுக்காதல்விதுமனெனமொழியும்பெயர்சேர்கந்தருவன்
பொற்றேர்த்தட்டாமல்குலுளாண்முன்னர்ப்புகுந்துபுகலுவனுல்.

பாசைபுரிசெபோவியமேமலராலணிசெய்மாலிகையே
தேசுதருமின்சித்திரமேதிரைவாரிதித்திஞ்சுவையமுதே
பேசிலெனதாருயிர்க்குயிரேபொதிற்றுணைவாழ்க்கையளாகிற்
பேசுபொருள்கடந்துபணிவிடைசெய்துய்வேனெனிதென்றான்.

மாதுபுகல்வாள்காந்தருவமன்றேபோகமதிலார்வ
மேதுமிலன்முப்புரமெரிசெய்சிவனன்மாலிவர்பூசைக்
காதலுடையேனுனதுமனையாகமனதிற்கருதாதநீர்
போதிப்போதுகொயவனத்திற்புகுந்தேனறிதியெனப்புகன்றாள். (௰௫)

அனகனெனினீயெனைத்தொடாதகறியுனதுநகரடைதி
யுனகதிருவாராகனைக்கொண்மலர்கொய்திடுதற்குய்யானத்
தினிதினடைமலெனவிழிவேலேவிபெனதாருயிர்வௌவித்
தனியிவயின்விட்டிடலுனதுதண்ணளிக்குத்தகவன்றே. (௰௬)

வாளாவிட்டேகுதல்வழக்கோவனிதாகிருபாமருந்தாகின்
றளாய்விட்டேனருள்புரியென்றறையும்விதுமனற்னைநோக்கிக்
கேளாய்குரங்குப்பிம் பிடித்துக்கிட்டவருகெட்டவனுன
காளாய்கவியாகெனவெகுண்டுகடுத்துக்கடுஞ்சாபங்கொடுத்தாள்.

தேவர்மகளிருளங்கவர்நற்செல்விசேர்ந்தகந்தருவன்
பாவைபகருஞ்சாபமுடன்பலிப்பக்குரக்குப்படிவமதை
மேவியலையுநாளிமயவெற்புச்சூழலுறைதரவெண்
சேவிலமருஞ்சிவன்வில்வமரத்தினிழற்சேர்ந்திருந்தான். (௰௮)

வேறு.

அன்பொழுகியன்னமுகமானமுசுவாங்கு
மின்மிளிருகின்றசடையண்ணல்பயில்வில்வந்

இன்னாகளவல்லையிலையுந்தவிருமெம்மான்
றன்றிருமுடிக்கனாறுதிருற்றனதனைந்தே. (௧௯)

சிந்துமிலையெந்தையுருவத்தைமறைசெய்யச்
சிந்தையுமைநைந்துமுசுவைச்சினவிநோக்கி
வந்தமருவாருயவராவிறைவன்மெய்ம்மீ
திந்தவிதமாக்குமதனுக்கிதுரைசெய்வாள். (௨௦)

மங்கைதருசாபமுமறந்துலகநாதன்
றுங்கமுடிமீதிலைகடின்னாவினைசெய்தா
யங்குவருசாபமகல்வாகவருபோது
மிங்குமுசுவின்முகமுனக்கியைகவென்றாள் (௨௧)

அன்னதுதெரிந்துமணிகண்டனருள்செய்வா
னென்னிவனையாரெனவிகழ்ந்துமுனிகின்றாய்
முன்னைமுடிவற்றபவமுற்றுமுயர்வில்வ
பன்னமுடியெய்திலொருவும்பரிவுபட்டே. (௨௨)

அப்பெரியகூவிளதளத்தைமிகவனபுற்
றொப்பரியவென்னுருவொருங்குமறைவெய்தச்
செப்பரியநல்வினைசெயப்படுதலாலே
யிப்பெரியவாமுசுவினுக்குவரமீவாம். (௨௩)

வேடனொருவன்புலியினால்வெருவுமேவிப்
பீடுபெறுவில்வமரமீதுபெரிதேறிக்
கோடுசெறிபன்னமதுகொய்துமுடிகொட்டி
வீடுபெறுதன்மைமுனமேதெரிதியன்றே. (௨௪)

ஆகவினிதற்குலகமுற்றுமரசாளு
மேதகுவலன்றாவுளத்துவிழைவுற்று
மாதெனவழுத்தவுமையுள்ளமகிழ்வானாள்
வேதமுதலன்னதைவிளித்திதுசொல்வானால். (௨௫)

செவ்விமுசுகுந்தனெனுநாமமதுசேர்வுற்
றெவ்வுலகுநல்லலவாசெய்தியிலகென்னக்
கொவ்வையிதழும்மையொடுகொன்றையணிபெம்மா
னவ்வுழியகன்றுவிண்ணடைந்துமறைவானான். (௨௬)

வேறு.

உரவுநீர்க்கட லுலகெலாமொருங்கரசுஞற்றிப்
பொருவிலைப்பரிமேதநூறுற்றுபுண்ணியஞ்சே
ராசனோர்ச்சுதருயமுசுமுகமுனாருகி
வருவதாயினனவனசுக்தனுர்கெடபாதோ. (உஎ)

வளர்ந்துமாமன்றயாகமநூலெலாமயக்கற்
றளர்ந்தொரைமபெருஞ்சுற்றமுமாசுறப்பனைத்துந்
தளர்ந்திடாதுதங்பாற்றமீஇக்கலியெனும்பெயரைக்
களைந்துமாமுசுகுந்தன்காசினியெலாங்காத்தான். (உஅ)

ஆண்டுமொருநாளகிதவுட்டிரனெனும்மவுண
னீண்டவாண்மையாலமரரையமரிடைநெருக்கி
மாண்டவச்சிரப்படையுடைவரிரியைமுதுகு
காண்டலாகிவின்றுடுந்ன்காற்படுத்திருந்தான். (உகூ)

தேவர்கோனதைப்பெயாவுணறற்றினுற்
றேவலாச்சுவர்க்காதிபத்தியத்தைவிட்டோடி
சேவலோன்றிருமாமறைந்திகிரியிலொருசார்க்
காவில்யாவருங்கண்படாதுறைதரவொருநாள். (௩0)

முருகுவிம்மியநந்தனமுயர்வரைச்சாரற்
பெரியநற்றவமியற்றிய பிருகுமாதவனற்
றருகுமாரியினழகுகண்டுளந்தடுமாறி
யருகுபோயவளத்தம்பற்றினனறமனுங்க. (௩௧)

துங்கமாதவனன்னதுதெரிந்துசொல்கிற்பான்
மங்கைமார்களைவன்மையிற்பற்றுதலரக்கர்
தங்களீதிநீயன்னதுபுரிதருதகையா
லிங்கிராக்கதனுகெனவிராக்கதனுனன். (௩உ)

அண்டர்நாயகனரசிழந்தாக்கனுபானுன்
மண்டுதீவினைவந்ததிவ்வாறெனமயக்கங்
கொண்டுதேவருங்குருவுநற்குவலயங்குறுகிக்
கண்டுமாமுசுகுந்தனையாசிகள்கழறி. (௩௩)

முகமனெண்ணிலமொழிந்தனரவுணர்கண்முடுகி
வெகுளவிண்ணவர்வேந்தன்வென்னிட்டிடவெற்பிற்
புகுக்குற்றதுமாக்களுமுருப்பொருந்தியதுந்
தகவுரைத்துவான்காவெனவிரங்குசாற்றினரால். (௧௪)

தேவர்சேர்தருதீமைதீர்த்தருளுகைசெயமேனற்
பாவமாம்பழியும்வருமெனப்படையெடுத்து
மேவிமாகருரகிதவுட்டிரனுயிர்வீட்டிக்
காவுமேம்படுகற்பகநாடுகாத்தனனால். (௧௫)

வேறு.

விண்ணவரிறைபெறும்வீடிவென்னுற
வெண்ணருகுறைசெறிந்திருந்தவெங்கணை
நண்ணினைபுரந்தனைநன்குநல்கினை
பண்ணலிவ்வுலகுகாத்தருளென்றார்சுரர். (௧௬)

மாகர்கண்மொழிகடவாதம்மன்னவன்
வாகைகொள்சிங்கவாதனக்கண்வைகுபு
நாகமுமவனியுநன்குகாத்தன
னோகைமிக்கனவுலகோர்பன்னான்குமே. (௧௭)

இவ்வகையரசுசெய்திருக்குநாளையிற்
செவ்வியமன்னனோர்தினத்திற்றேவர்சூழ்ந்
தொவ்வுறவணைமிசையுற்றுவைகினா
னவ்வவரமைபணியடைவினாற்றினார். (௧௮)

நிருத்தநன்மாதர்கணடிக்கநேர்ந்தனர்
பொருத்துபாடகத்தடிப்பூவைமார்களிற்
கருத்தவாங்குழலெழிலரம்பைகண்டனள்
பெருத்ததோண்மன்னவன்வதநப்பெற்றியே. (௧௯)

அன்னதுதன்னைத்தன்னருகின்மாதரைத்
தன்னதொண்விழிகொடுகாட்டித்தையல்கா
ளென்னிவன்முசுவெனவிசைத்துநக்கனண்
மன்னவனதுதெரிந்திலச்சைமன்னியே. (௨௰)

வீரனாய்வள்ளலாய்விளங்குநாலனாய்ச்
சீரெலாநிரப்பியசெல்வச்செம்மலா
யேருலாஞ்சரசனாயிடினுமேழையர்
மூரலாலரசுசெய்முறைமைநீத்தனன். (௪௧)

அழகறுமுசுமுகமகன்றமானுட
விழுமியமுகமடைவேட்கைவிஞ்சினான்
குழுமியதழனிறைகுண்டநாப்பணிற்
செழுமணிவயிரவொண்டோணுஞ்சேர்த்தினான். (௪௨)

எருறுமதலைமீதிவர்ந்துநின்றுதன்
சீருறுகுலத்திசைத்தேவனாகிய
சூரியன்றணையடிதொழுதுநோற்றனன்
வேரியந்தொடைமுசுகுந்தவேந்தனே. (௪௩)

இப்படிப்புரிதவத்தினுக்கென்முன்னருற்
றொப்பருசிவைசினந்துரைத்தசாபமிங்
கெப்பெருநோன்பினுமிரிவதில்லைகா
ணைப்பணிசடையரனடித்தொண்டல்லதே. (௪௪)

அலைதவழ்நதிதொறுமடைந்தடைந்துதோய்ந்
திலகியவயனரியீசனென்பவர்
நலதலந்தோறுநீநண்ணிப்போற்றிடிற்
பொலிமுகம்புகுமெனத்தவத்தைப்போக்கியே (௪௫)

அவனியிலமைபலவாறுமூழ்கியு
முவமையிலரியானுறையுமொண்டல
மெவையவைதொறுமடைந்திலங்கப்போற்றியு
நவைமுசுமுகமகலாமனண்ணவே. (௪௬)

என்னினிப்புரிவதென்றிறைவனெண்ணிலா
வின்னலுற்றுளமயர்ந்திருக்குமெல்வையின்
மன்னியமகதியாழ்வைகைநாரதன்
றுன்னியன்னவனுளங்குளிரச்சொல்லுவான். (௪௭)

வேறு.

சீரார்தருதிரிமூர்த்திமலையெனச்செப்புமொரு
போரார்தலமுண்டதினீசெலிற்பிழையாதுவர

மோராரியயனீசனுமீவரித்திற்சிறிதுஞ்
சாராதடையெனநாரதன்சாற்றித்தணந்தனனே. (௪௮)

பூநாறுமேவற்றைகப்புரவலனுங்குபொருக்கெனப்போந்
தீநாறுபூமரைத்தோணியினுடியெம்மீசனரி
சானுறுபோதுறைவோனேரடிக்கட்கமலமலர்தூஉய்
வானுறுபோம்வரைமீதினிலாடிவணங்கினனே. (௪௯)

அந்நாட்டனிற்றிரிமூர்த்தியசலத்திலாரணத்தோர்
முன்னூட்டியனிதிபூசனையாற்றித்துதிமொழிந்து
பின்னூட்கதிரெழுமுன்னரொருந்துபிறங்கெழிற்பா
றென்னுறுதோணித்திரிவேணிசெவ்விதினுடினனே. (௫௰)

இருநாளொருதரமூழ்கவிருவிதத்தெய்திடலாய்
வருசாபமுற்றுமற்றப்பால்வருவைகன்மூழ்கவுடன்
வெருவாமுசுமுசப்விட்டெழிலாமுகமேவியவேந்
தருளார்பனவருக்கம்பொனுமாடையுமார்த்தினனே. (௫௧)

கலன்பொலன்றாசுமுதற்பொருண்மூவர்களிப்பவளித்
துலப்பொருசோளன்றிருப்பணிபொற்பவுமுற்றியன்பின்
வலம்புரியாமவனோமான்சரகுந்தரம்வைத்தவரை
நலம்புரிபூசைபண்ணுவண்ணவைகிநடாத்தினனே. (௫௨)

அற்பாற்பலபலதீர்த்தத்தாற்றுடியரனிவாழ்
பொற்பார்பலதளிபோய்ப்பூசையாற்றிப்புகழ்ந்துதுதித்
திற்பாலிறைஞ்சித்திருப்பணியார்த்திமிளங்குவளத்
திற்பாரிலொப்பருதன்பதிசேர்ந்தரசெய்தினனே. (௫௩)

முருகார்மலர்த்திருத்தோணியின்மூழ்குமுசுகுந்தனுக்
கருளாங்குதவும்மூர்த்திகள்பாதத்தணிமலர்தூஉய்த்
தெருளாய்ப்பணிந்தவர்தீவினைதீர்ந்துசிறந்தசெல்வப்
பொருளார்ந்தழகுபுகழ்சேர்ந்தரசுபொருந்துவரே. (௫௪)

என்றாங்கருளியருதனைமாதவரேத்தினராய்
நன்றாம்புரந்தரன்முன்னேயரக்கவடிவநணி

நின்றனெனத்திருவாய்மலர்ந்தாயந்நிலையினின்று
பின்றனிகழ்ந்ததுமுற்றும்பகரெனப்பேசுவனே. (௫௪)

௰௪. படலம் - ௫௪க்கு திருவிருத்தம் ௮௫௰.

முசுகுந்தன் முகம்பெற்ற படல முற்றிற்று.



## ௰௫ - வது இந்திரன் சாபநீங்கு படலம்.

அனையிலாதகுழவியிதென்னவும்புயல்
வனமிலாதசுருள்விரிவான்பயிரென்னவுங்
கனிவிலாமுயிர்போகியகாத்திரமென்னவு
மனனிலாதுவிண்டுவெனப்புவறந்தவே. (௧)

உரலடிச்சுவைதசேரயிராவதவும்பலே
றரசகன்றனணிமுசுமுகத்தண்ணலு
மொருவனூற்றனனென்னினிச்செய்வதென்றும்பர்கள்
பருவரற்கடற்பட்டகனொந்துபதைத்தனர்.     (௨)

அன்னகாலையினாதனங்குவந்தண்மினா
னென்னைநீயிர்துயருறலும்மொழிலேந்தலை
மன்னுதீயவரக்கவுருத்தெறுமாறுசெய்
தின்னிநீவெனவிசைத்தவ்வுழியேகினான். (௩)

அருளியாறுகடுங்கவரியரியுண்டுபெண்
விரிவதாகியசோலைசுலாயிமவெற்புக
மருவிமாலையுங்காலையும்யாமமும்வைகலுந்
திரியுந்தீயவரக்கன்முனாதன்சென்றனன். (௪)

புன்கண்மிக்கதனக்குணவக்கமுன்புக்கதென்
றின்பமுற்றெதிரிந்திரனாநகத்தின்வயிற்
றன்கரத்திற்கரகபயப்படத்தாக்கினா
னின்புறத்தருமைந்தெழுத்தும்மகத்தெண்ணியே. (௫)

நசனேர்மனுவெண்ணியநீர்முகத்தெற்றனு
மயசின்மேல்வருமுந்தடிபிந்தடியாக்கினான்

காசமேவுமயக்கவறிவுகழிந்தனன்
றேசுசேர்சடைநாரதனச்செயறோர்ந்தனன். (௬)

மன்பின்வாவெனநாரதனேசுனுமிந்திர
னன்பினுதொடர்கன்றினைடர்ந்துதொடர்ந்தனன்
றென்கைலாயகிரிதிருக்குறச்சேர்தலுந்
தன்பிழைகவாறணைந்தானப்புரந்தரன். (௭)

பார்த்துநாரதனெங்கினிப்போக்கெனப்பாணியா
லார்த்துமூர்த்திகண்மூவரமர்கரைத்தோணிமீ
தீர்த்தங்காழ்க்கிடவுடனிந்திரனோர்கெடப்
போர்த்தசாபவரக்கவுருப்பொரிந்தோடிற்றே. (௮)

வேறு.

துயின்றெழுந்தனெனச்சுரர்தம்பிறை
வயின்றொடர்ந்தவடிவதுமாறலும்
பயின்றமுன்னைப்படிவமுமாகமு
மியன்றநல்லறநாரறிவெய்திற்றே. (௯)

நாமுறைந்தவெதவணிவணண்ணிடப்
போமதற்கிடைபோந்தவெதன்மனன்றுளந்
தாமருண்டுதவன்றிருத்தாட்டுணை
மாமலர்க்கண்மணிமுடிதீட்டியே. (௰)

திவவியாழ்வடிக்கின்னிசைதேக்குகைத்
துவதவாவிவண்டுன்னினெசொல்லென
வுவகைபேவியநாரதனும்பர்கோ
விவையதாமெனவெய்தியதோதுவான். (௰௧)

அகிதவுட்டிரனுமவுன்னன்றெறப்
புகுவதற்கிடமின்றியிமயம்போ
யகமறுத்தபிருகுவருளிய
மகவெழிற்காமால்கொடுபற்றினுய். (௰௨)

அதற்கருந்தவன்சாபத்தாக்கனு
பிதத்திரிந்தனைதேவரெலாமுளம்

பகைத்தான்முசுகுந்தற்பழிச்சலும்
வகைத்தனன்றிறல்வாளவுணன்றனை. (௰௩)

மன்னனாய்முசுகுந்தனைமரவான்
மின்னனாள்புரணிநகைதயின்வெட்குறு
வன்னனேகியிவ்வாறுபடிந்தாற்
றன்னினன்மனுடப்புகழ்த்துமுகம். (௰௪)

அண்டர்துன்பமறவாசேபுனைக்
கண்டுபல்வரைகானகம்யாவுநீத்
தொண்டிரைத்திருத்தோணியுயர்புனற்
கண்டிளைப்பப்புரிந்தனன்காண்டியான். (௰௫)

அவுணனாகியசாபமகன்றபைஞ்
சுவணமாமுருத்தான்வினையெண்ணலுந்
தவனங்கோனையஞ்சாரசூழ்கினன்
கவளநான்மருப்புக்கரிக்காவலன். (௰௬)

அறிவிலேனைப்பொருட்படுத்தாய்க்குமென்
னிறைமைமேவசிறத்தியவேந்தற்கும்
வறியனேன்செய்கைமாறுமொன்றுண்டுகொ
லறவனேயென்றடிபிணர்த்தாழ்ந்தனன். (௰௭)

திரைவிராவியதோணித்திருநதி
விரியுநூல்வழிமீட்டும்படிந்தனன்
கரியமால்சிவன்போதன்கழறொழு
துரியபூசனையன்பினுஞற்றற்கே. (௰௮)

வேறு.

தந்திரியாழ்கைவைத்ததவனொடுதளிக்கட்சென்று
பைந்துழாய்மாலையான்முன்படியளந்தருள்பாதத்துஞ்
சந்தமாநிருத்தஞ்செய்தோன்சரணத்தும்பதுமந்தங்கு
மந்தவேதன்காற்பாலுமலர்கடூய்ப்பணிந்தன்பாக, (௰௯)

இந்திரையிலங்குமார்பவிமையமானிருக்கும்வாமச்
சுந்தரகலைமான்கொங்கைதோயுமெண்டோட்சேர்போத

வெந்தனைப்புரந்திங்காட்கொளிகறைவர்காளெனப்போற்றி
யந்தரத்தடைந்துதேவரடிமைசெயக்கொண்டானால். (௨௰)

செப்புமிக்தீர்த்தத்தாடிச்சிவனையன்றிருபாற்போற்றி
யொப்பில்பொன்றூராடையுண்டிபூவொளாறிந்தோர்சே
ரப்பெரும்பாலனூர்சொல்வார்நாரதனடைந்துபூசித்
துப்பெறுசிறப்பைச்சூதன்சொல்லுவானறுமோருக்கே. (௨௧)

ஆக படலம் ௫௰ - க்கு திருவிருத்தம் ௮௱௧.
இந்திரன் சாபநீங்க படலமுற்றிற்று.

## ௫௧ - வது நாரதன் பூசித்தபடலம்.



வாரணமாதுதன் மகிழ்வாக
நாரதனுக்குமுனைவினையல்ல
பூரணதென்கயிலாயவெருப்புச்
சீரணுகித்தெரியாசையன்சென்றான். (௧)

வில்வமூலநாச்சியுமேதகுகங்கையு
மல்கியசெஞ்சடைவானவன்மாதல
மெல்லையெதிர்ந்ததுமேத்திசைத்தின்பாய்
வல்லைவணங்கிவழிக்கொடுசென்றான். (௨)

கமுகுபர்த்தாழைகள் கண்ணிவளங்கள்
சமைதருகொங்கெனற்றண்ணடைசார்ந்தான்
சிமயநெருங்கியதென்கயிலாயந்
தமையிருவிழிபொடுகண்டனன்றாழ்ந்தான். (௩)

விழிவழிபொழியெழிலானந்தவெள்ள
மொழுகுபுமருமமெலாநனைந்துகள
விழுமியபண்டிரண்டொருவடிவின்பிற்
றழுவினவனதவன்றடமிவர்கின்றான். (௪)

வேறு.

எவரும்வணங்குமொருமூவரெனவெண்ணி
யாவலடைமாமரமனைத்தும்வழிபட்டாங்

கோவறவுதிர்க்குமலரும்பர்சொரியொண்பூ
மேவவருவண்டுகள்விலக்குமெழில்கண்டான். (௫)

வெற்பினடிகாணவிழைவிண்டுபலர்கேழற்
பொற்புருவுகொண்டகழ்குடைந்துபுகல்போலச்
சுற்றுநிறைகந்தமதுதோண்டியயில்வுற்று
நிற்குமெழிலெய்துகுழுநேர்நெடிதுகண்டான். (௬)

நடுவனுயிர்சாயவடைபாலனுயிர்நண்ணக்
கடிதினருள்செய்தகளகண்டனரிபோத
னுடையவடிவாம்வரையினுற்றவெமையாரே
கடிபவரெனக்களிகொளுங்கரிகள்கண்டான். (௭)

ஆவியொடுமெய்மைநிகராகவரன்மெய்மேன்
மேவுமனவல்லவுரிவிட்டவினமென்னத்
தாவியெழுமுள்ளமகிழ்கொண்டுதனியார்த்தே
வாவுபுலிசிங்கமிபமாவருவகண்டான். (௮)

பாணியலதேகமறியாதுகலைபாதம்
பூணுமுயலுப்பவயல்போதநெறியாது
நாணியெனவெங்கவயநற்கரடிகாட்டா
தானுவுருமுற்றும்விளையாடுதகைகண்டான். (௯)

வெற்புருவமீதும்விடலின்றிவிடநாகப்
பொற்றெரியலுற்றபொலிவிற்பொருவிலார
நற்றருவிடைக்குடிகொளுஞ்சுடிகைநாகம்
விற்பரவமேவிவிளையாடுவனகண்டான். (௰)

அண்ணன்முனணிந்தவடகத்தணிகளென்ன
வெண்ணில்புலிசிங்கமிபமென்றுரைசெயீதின்
வண்ணவுரியுந்தலைவெண்மாலிகைகளென்னத்
தண்ணருவியாறுபலதானடைவகண்டான். (௰௧)

நீள்பனைநெடுங்கையிபநின்றுபொருபோது
தாள்படவுடைந்தகழைதந்ததரளத்தொண்
டுள்சுதைவிபூதிபலதூயவயிரக்கல்
வாள்விடுமெலும்பினணிமாலைபலகண்டான். (௰௨)

இருசெவிதமக்குறையுளென்னவினிதெய்தப்
பொருவிலெழில்யாழெழிசைபொங்குவதுபோல
விருளிரிளையுங்கதிர்சுகங்களலகிரும்
வரையருகெலாமரிகள்பாடுவனகண்டான். (௰௩)

அற்றமகல்கைக்கணமராரழலையொப்பச்
சுற்றுமொளிதுற்றுவளர்சோதிமரமுங்கைப்
பற்றுதூய்மிக்கொவிபயப்பதெனவேட
ரெற்றுபறைபொற்றைபிடையெய்துவதுகண்டான். (௰௪)

இன்பிரியும்வன்பிறவியென்னும்வரையேறும்
வன்பெரியதுன்புமலையேறவருமெய்ப்பும்
பின்பொருவநன்குகுளிரும்பிரிதிறெற்கா
றன்பொருவிலண்ணலருடன்னில்வரல்கண்டான். (௰௫)

பீதிதருவெம்பிறவிபோவருள்பெற்றோர்
போதவொளிகெட்டுவிடவுட்புகுதலாகு
வாதனைசெய்வன்மலம்விலங்கியெனமஞ்சு
மீதுசிகரத்துமுடிமேவுவதுகண்டான். (௰௬)

வேறு.

செப்புமித்தகைத்தாய்ச்செறிவளமெலாந்திவவியாழ்முனிகண்ணுற்
றெப்பில்யோகியருள்ளமாதாரமூவிரண்டையுமொரீஇயப்பால்
வைப்பிலாயிரஞ்சேயிதழ்த்தாமரைவைகுஞ்சோதியைச்சேர்ந்தாங்
கப்பொன்மால்வரையாறெலாங்கடந்துபோயணிமுடியருகானான்.

உளமொடுங்கியோகத்திறற்சோதியையுறுபவர்க்கவணெம்மான்
றளமலிந்தகாட்சிலம்பொலிதந்தெனத்தாவிவிண்டொட்டோங்கு
வளமலிந்தவாம்வரையருகுறச்சுரர்வானதுந்துபிதன்றே
டளவநன்றுமும்மூர்த்திகடோத்திரத்தார்ப்பினன்மகிழ்வானான்.

அங்குபானதிதென்னதிதோணியென்றறைபெயரமைமூன்றுந்
துங்கமாநதிதோய்ந்துலர்தூசிடைதுவக்கிநான்முறைசோதி
பொங்குநீற்றணிபூண்டுநித்தியகடன்பொற்புறவினிதாற்றிச்
செங்கண்மாலரன்போதனெனன்பவருறைதிகிரியின்முடிசேர்ந்தான்.

சேர்ந்துசுற்றெலாநோக்கலுமடி முதற்சேர்தருகிரியெல்லா
மார்ந்தபீடமாயதன்மிசைநெடுகியவசலநல்லணிமுற்றுஞ்
சார்ந்தமூர்த்தமாய்த்தோற்றலுமஞ்சியித்தனிவரைமுடியின்கட்
போந்துபோற்றலெவ்வாறெனவுருகியுட்புகன்றெதிர்போந்தானால்.

ஒப்பில்காந்தநேருறுசிபோன்மூவர்வாழோங்கலின்றிருமுன்னர்ச்
செப்பநாரதன்சிந்தைசென்றருண்மலைபுகத்திருக்கிழிநீர்கா
ரொப்பமார்பகநனைப்பமெய்புளகெழவுரையெலாந்தடுமாற
வப்பெமானரியயன்றிருவடிபணிந்தனன்பெருங்கலியாழ்ந்தான். (௨௧)

அதிகபோதுற்றுணமனைக்கிடந்தனனுநந்தமகத்தார
வெதிரின்மேலெழுந்திருகரங்களைச்சிரத்திருத்தித்தென்கைலாய
பதியின்மேவியபரந்தாமசெம்பதுமவாசனபோற்றி
மதியிலேற்கருள்புரிந்ததற்புதமெனவழுத்திப்பூசனைசெய்தான்.

தேவர்விஞ்சையர்சாரணர்சித்தர்கடிருந்தெழிற்றவத்தோர்கண்
மேவிநித்தமும்வழிபடுமூவர்கண்மேம்படுபுகழெல்லா
நாவினிற்புகல்பாவொடுபொருந்துறநல்லெழான்முறைவீக்கி
யோவிலன்புறவேழிசைவழாவகையுவப்பினேத்தினன்மன்னோ.

கட்டுபொற்சடையவிழ்ந்துபின்சரிதரக்காதணிகுழையாட
வொட்டுவற்கலைதட்பத்தன்னுளமெழுந்துவகையின்முனரோடச்
சட்டுமும்மணிநுமணியத்தழுத்திவிண்டடவியதனிக்கோயிற்
கட்டுணைப்படத்தாழ்ந்தெழுந்தகமிகக்களிகொளவடுத்தானால். (௨௪)

வேறு.

எழுமொளிமுத்தநாற்கோட்டியம்பலமருங்குமொய்ப்ப
விழுமியமதவெள்ளத்திராயிரங்கோட்டுவேழஞ்
செழுமணிப்புவனப்பொற்றேர்சேர்த்தியகலினப்பாய்மா
தழுவுபொற்படிகணீண்டவாய்தலின்முன்னர்ச்சார. (௨௫)

கப்பணம்பிண்டிபாலங்கழுக்கடைமுசலஞாங்க
ரொப்பருமழுத்தண்டாழியுயர்ந்தவச்சிரமொண்சூலஞ்
செப்பருமெழுவாள்பாசஞ்சிலைகுயஞ்சுரிகைசெங்கை
வைப்புறுகணங்களெண்ணிலாதவாய்மருங்குமொய்ப்ப. (௨௬)

படகந்திண்டிமந்தடாரிபணைகிணைதக்கைமொந்தை
துடிவளைபதலைகோடுசெல்லரிபம்பைசொல்லு
மிடமருநின்றெண்ணில்லாவிரட்டொலியெட்டுத்திக்குங்
கிடுகிடென்றதிரவாரிக்கினரொலியடக்கிவிஞ்ச. (௨௭)

வேறு.

காந்தாரம்பைரவிதேவக்கிரியைசீராகங்கௌசிகஞ்சீர்
சார்ந்தோதாமலைகரிவேளாவளிமாளவிகோடிதன்னியாசி
கூர்ந்தோராகிரிநாராயணிகுண்டக்கிரியைகூர்ச்சரிபங்காளங்
நீங்கதெனத்திருசெவியிற்சேவதிநிறலவர்சேவித்துப்பாட. (௨௮)

பாண்டரங்கங்கொடுகொட்டிகாபாலமெனும்பரமசிவன்முக்கூத்து
மாண்டருநற்குடைகொட்டிபெருங்குடமுடைவிருவகையுமோர்பா
லீண்டனியைருடமல்லுமரக்காலியமெனுமீரிரண்டுகூத்துங்
காண்டரவவ்வாலயத்துக்கட்டெரிந்தோருருகியுளங்களித்தங்காட.

வடிவமைமைப்பங்கணைக்கிழவர்தமக்குரியபேடுமுறைவழுவாதாடக்
கடையமயிராணிசெயமலர்மாதுபரவையுளங்களிகொடாட
வடியயிற்கட்குமரிமரக்காறழுவத்துடிமேயழாமாதராட
நடனமிடுமரமகளிர்நாணவளவகனடனநன்கங்காட (௩௰)

வானமருர்வசியரம்பைதிலோத்தமைமேனகையொழுங்கில்வந்து [நின்று
தேனமர்பூஞ்செங்கைவழிவிழியும்விழிவழியுளமுஞ்செல்லவாடக்
கானமர்பாமுனிவரர்களானைநான்கையுமுறையிற்கசிந்தங்கோத
வீணமிலாத்தந்திரியாழ்த்தும்புருநாரதர்கள்பலரினிதுபாட. (௩௧)

மாத்தனையோவிந்திரர்களெத்தனையோசந்திரர்களிரவிதேவ
ரெத்தனையோவெத்தனையோவுருத்திரர்களிமையவர்கள்கருடர்சித்த
ரெத்தனையோவெத்தனையோகந்தருவரெத்தனையோவிருடிமார்க
ளெத்தனையாமெனத்தேருதலைக்ககத்துப்புறத்துபடர்ந்தேத்திப்
போற்ற. (௩௨)

குண்டையாடிசாந்தாற்றியாலவட்டங்கவரிகொடிக்குழாங்கண்மொய்ப்ப
நெடிதோடுமொருகோடிதூணுறுவுமண்டபத்துணைடியமாலும்
வடிவேறுபொடிபூசும்வானவனுமறைமலரில்வைகுவானுங்
குடியேறியரிதாங்குதவிசினிடைக்கொலுவிருக்குங்கோயில்

வேறு.

எட்டுமைந்தாறுமையந்திட
கெட்டுடற்படிநீட்டினு
னொட்டியங்கைநகையபுச்சியி
லட்டிமுன்னுறவாகினான். (௩௪)

வந்தவந்தமின்மாசனச்
சந்தைச்சந்தடித்தான்றடாது
நந்திமூவர்முனாதா
முந்துகென்னமுன்முந்தினான். (௩௫)

அன்னவாகனனானரி
யின்னனர்நேர்முனியெய்தனு
மன்னவென்றடைந்தாயெனத்
தன்னையின்றெனச்சாற்றினான். (௩௬)

சூலமுண்டவனம்புயன்
ஞாலமுண்டருணாரணன்
கோலமுண்டனன்கண்கோடு
சீலவொண்டுதிசெப்புவான். (௩௭)

வேறு.

பிறையுங்காளத்தாவுஞ்சடையிற்பிரியாதணியும்பெரியாய்சரண
மறைவன்சிறகர்க்கருடன்புயமேல்வருவாய்மலரான்மருணாசரணஞ்
செறிவன்பகைமான்குரலுஞ்சுவைசேரிசையும்பிரியாச்செவியாய் [சரணம்
பறிவண்படமுந்துளபத்தொடையும்பண்பாயணியும்பகவாசரணம்.

கமலத்தவிசேறியவாசரணங்கலைமாதுறைநாவகனேசரணஞ்
சிமயத்திறல்விற்கரனேசரணந்திருநீறணிசேர்தேகாசரணஞ்
சமயத்தலறுங்கரிமுற்குறுகித்தானுளுகைசெய்தலைவாசரண
மெமையெப்பொழுதுந்தொண்டாக்கியசீரியையுந்திரிமூர்த்திகளே
சரணம். (௩௯)

பெண்ணாயாணாயுமையாயானைப்பிரியாவுருவாம்பெரியாய்சரண
மண்ணீர்வானாய்வளியாயனலாய்மருவிப்பொருவாமாலேசரணங்

கண்ணோர்கமலாலயமீதுறைவாய்கனைநான்மறையங்கொடியாய்சர
[ணந்
தெண்ணீரடைச்செகதென்கயிலைத்திரிமூர்த்திகளேசரணஞ்
[சரணம். (௪௰)

வேறு.

எனநாரதமாமுனியேத்தாதனு
மனுமாலொன்வேதனுமீசபரமா
வெனவேண்டுவதிசைசெய்யினிமொழுத்
தனிமூவர்கடாமொழுதோதுவனால். (௪௧)

சேணார்திரிமூர்த்தியெழிற்றிகிரி
மாணார்தாவைகரமாலயவுந்
தாணோர்சதகந்தரிசிக்கவர
மாணனருள்வீரெனவவரறைவார். (௪௨)

யாழ்கைவிரறைறவரலாயமிர்திற்
சேழ்வைகியவின்னிசைசெய்கிழுவ
வாழ்விங்கடைவாரடைவார்வாரீ
தாழ்வென்பெறவென்றவர்தந்தனரால். (௪௩)

எனவன்னவரீவரமெய்தியெழின்
முனிவன்னவர்சேவடிமுடிதொடவீழ்ந்
தினிதின்னுலகின்வயினேகினனற்
றனிமன்றருமன்கதைசாற்றுவனால். (௪௪)

ஆக படலம் ௬௯ - க்கு திருவிருத்தம் ௯௰௫.

நாரதன்பூசித்த படல முற்றிற்று.



## ௭௰ - வது தருமபுத்திரப் படலம்.



உயர்தவர்விதுரன்முன்னோன்பாண்டுவென்றுரைபேர்பெற்ற
செயிரகல்வேந்தனீன்றதருமபுத்திரனுஞ்செல்வ
னிமையெழில்விசயன்வீமனகுலன்சாதேவனென்னும்
புயனிகரிளைஞரோடுபோந்தவன்பொய்யிலாதான். (௧)

பொன்னுலகாளன்போல்வானாசிறைக்கலைதேர்பொற்பாற்
பன்னகாதிபனேயாவான்காத்தலிற்பாப்பின்வித்தை
துன்னுமாவொப்பான்றேகச்சோதியிற்சோதிபோல்வா
னன்னநேராகப்பாவமறுத்தறமகத்திற்கொண்டான். (௨)

வன்மையான்மேருவொப்பான்மலர்வதனத்துச்சீதந்
தன்மையாற்கலைமேவிலொங்குந்தண்குலக்கடவுளொப்பான்
றண்மையால்வேதவொப்பான்சாய்தராப்பொறுமையென்னு
நன்மையாலகழ்வார்த்தாங்குநானிலந்தன்னையொப்பான். (௩)

பொருளினுளகையாலரிபோல்பவன்றருமம்போக்கா
வருளினற்கரையீன்பாவையருட்கடைக்கண்ணேயாவான்
மருவலார்தம்மைவாட்டிவ்வலிமையாலென்றுள்பாங்கர்ப்
பெருமனோர்மூறுவலொப்பான்பேரிசைத்துவசம்பெற்றான். (௪)

அலககல்சேனைதன்றலைவர்கலியன்றனோர்பால்
விலகலாநிவாற்றென்பான்மேவியநிவெறுப்பா
னிலகவீகொடையரன்பெச்சுமிருதிதன்னைமெய்வான்
பொலிபுயாசலப்பூந்தாரான்றருமபுத்திரப்பேர்பூண்டான். (௫)

செல்வமுஞ்சிறப்புஞ்சீர்த்தியுந்தவமுந்தேயாக்
கல்வியுமொழுக்குமேலாங்கருணையுமறிவுநாளு
மொல்கலிறருமனீயுமொண்சுதனென்றலன்றேன்
பல்பெருமையையும்பேசப்பங்கயனுமாமோ. (௬)

அன்னவனிராசசூடாமணியவனேகயாகந்
தன்னைநானெறியினாற்றித்தானங்களனேகமாக
முன்னைவேதியருக்கீந்துமூவுலகமுங்கொண்டாட
மன்னுமாமகுடஞ்சூட்டிமனுமுறையரசுசெய்தான். (௭)

தருமத்தின்றலைமேலோங்கச்சந்திசாருசார
வருமித்தைபாவமாறவைதிகசைவமல்கத்
திரைதத்துகடல்சூழ்ஞாலஞ்செழிக்கச்சிற்றரசரெல்லா
மொருமித்துத்திறைவந்தீயவரசாளுநாளில். (அ)

அலககனிதியவெற்புமலைக்கடற்படையுநாடும்
பொலிதிருநகரும்பூணும்பொறியகல்புயங்கசேது

நலனிலாச்சூதால்வௌவநல்வழக்கடவுளீன்ற
திலகனுந்தருமராசன்சென்றனன்றீம்வெங்கானம். (௯)

அனைவெவதாஞ்செய்தாசுதிர்வடமீனன்ன
னினியகற்பினையபாஞ்சாலியென்னுநன்சனேவியோடு
மெனவிசைக்கினுந்தட்டாதவிளையவர்நால்வரோடுங்
கனியிருட்கானந்தன்னிற்கட்டபட்டிருக்குநாளில். (௰)

அரவவெங்கொடிசொடியோனைவகல்வஞ்சமாற்றப்
பருவரற்பாலையாழ்ப்பட்டுழன்றுழைமெநொந்து
தருமமூர்த்தையயுஞ்சற்றுந்தவிர்தராந்தகவிவசின்றூற்
பெரியவர்பெருமைமுற்றும்பேசிடவல்லார்யாரே. (௰௧)

உனைவுனவுள்ளம்போழுமுயர்துயரீந்தோர்மாட்டுங்
கனவினுஞ்சினம்வந்தெய்தாக்கலியைப்பொறைகைக்கொண்டான்
றினகரன்கரமுட்செல்லாத்தியமுட்கானந்தோறுந்
தனதுயிரிளையதம்பிமாருடன்றங்குநாளில். (௰௨)

மங்குலைக்கிழித்துமேற்போம்வார்கொடிகருழாங்கொண்மாடந்
திங்களிற்றிகழுஞ்செல்வத்துவாரகையரசுசெய்யும்
பங்கயக்கண்ணனுந்திபாலனுந்தருமராசன்
றங்கியதாயதீயதழல்வனந்தன்னில்வந்தான். (௰௩)

வந்தவக்காலைகாலைவான்வருமிரவிகண்ட
செந்தளக்கமலப்போதிற்றிருமுகமலர்ச்சிசேர
முந்துறவணங்கிப்போற்றிமுகமனன்கியம்பியப்பாற்
சந்தநற்றவிசிந்தன்னதனிலெழுந்தருளச்செய்து. (௰௪)

தருமந்தானனேகசம்வற்சரந்தவப்புரிதன்மைத்தா
லரவிந்தாக்கத்தாயுன்றன்றரிசனையடையலானேந்
தெருமந்தாரணியந்தன்னிற்றிரௌபதாதேவியோடு
மருமந்தாமனுசரோடுயடைந்ததுமிகநன்றுமே. (௰௫)

வேறு.

என்றங்கின்மொழியியப்பியப்பாலெழிற்றருமன்
மன்றலந்துழாய்மாலைமான்மாமுகநோக்கி

யென்றனுநெற்செல்வமுநகராமுமிழுந்து
கன்றாகின்றதுக்பென்றுகொல்கழிவதோகாணேம். (௰௬)

அரவசேதனனடிக்கடியெங்களுக்காக்கும்
பெரியவேதனைபெத்தனையென்றியாம்பேச
நெறிநிதிபெனச்செப்பித்தன்றிறலினையவரோ
டருகுமேவியபோதரியறன்மகற்கறைவான். (௰௭)

நடுவனல்கியநந்தனவறிவகறநுக
னுடையதுட்டர்பாலிலக்குமிசிறுபகலுறைவா
னடுவுநல்லறச்செய்கையுநன்குடையவர்பா
லடையும்வெந்துயர்வறுமையுநிலையிலவாமே. (௰௮)

கங்கையைச்சடைக்கண்ணுடைக்கண்ணுதற்கடவு
ளங்கழற்றொழுமாற்றலாலுனதறத்தாற்று
லிங்கடர்த்திடமிடரெலாமொல்லையிலேகித்
தங்குநல்வளமென்றுளநேதற்றுவசாற்றி. (௰௯)

குருகுலத்திறைவரைவருகொற்றவரெல்லாம்
புரியுநற்றவமுற்றுமிங்கோருருப்பொருந்தித்
தரையுதித்ததொத்திலங்கியதராபதியான
தருமனன்முகங்கணனான்கண்டுநோக்கிச்சாற்றுவனால். (௨௰)

வாரிதிக்கெதாணிமாற்றுமாமுரசகேதனவோர்
காரியத்தினைக்கழறுவாங்கேட்டிதென்கயிலை
சாருமத்திரிமூர்த்திகடாட்டுணைப்பூசை
நெறிவித்தலத்தரசுகைகூடிடுநிசமே. (௨௧)

வேறு.

இலகுலையழல்கால்வைவேலேந்தியசெங்கைச்சிங்க
நலமலிசெங்கோல்கோடாநளமகாராசனென்பான்
வலிமலிகலியைவாட்டிபாற்றலென்றன்கைவாங்கும்
பொலிவளநகருநாடும்பொருந்திப்பூதலத்தையாண்டான். (௨௨)

பருப்பதச்சிறகரீர்ந்தபாய்முனைவயிரச்செங்கை
மருப்பொருநான்குகொண்டமதமலைமகவான்மேனாட்

செருக்களத்தரக்கர்வெற்றிசேர்ந்துளசேரப்பெற்ற
தருத்திருநாடுமீட்டுத்தனியரசாட்சிசெய்தான். (௨௩)

வின்டொடுமூன்றுமூர்த்திவெற்பினைமேவியன்னோர்க்
கண்டடிபணிந்துபோற்றிக்களித்தெழிற்பூசையாற்றிப்
பண்டரசாளப்பெற்றபார்த்திபர்தம்மையெண்ணி
விண்டிடவேண்டிற்கற்றபப்பற்பலவேண்டுமென்றே. (௨௪)

என்னப்பன்விட்டகேட்டவுதிட்டிரனிளையாரோடும்
வன்னப்பொன்னுடைமாலைவழங்கெனவிடைவாய்ந்தாரா
யன்னப்புட்கருடன்சேவாரோகணாரமாவ்வெற்புத்
துன்னப்புக்கனர்மால்வாரித்துவாரகாபுரிபுக்கானால். (௨௫)

அறன்மகனனுசரோடுமளவிலாவாறுங்குன்றுஞ்
செறிதருவனமுந்தீர்த்தப்பாற்றிரிமூர்த்திவெற்பை
நெறிதனிலெதிரேநோக்கிநெஞ்சகங்குழைந்துபோற்றிக்
குறுகியங்கருகாந்தோணிக்குளிர்நதிவிதியினாடி. (௨௬)

பூதிநற்பூதியப்பாற்பொற்புறவணிந்துபின்ன
ராதியைந்தெழுத்துமட்டாக்கரமுமங்கடைவினெண்ணி
மீதினைவிண்ணைமண்ணைமெல்லடியளவுசெய்த
சீதரனென்னநீண்டசெம்பொனாலயத்திற்சென்று. (௨௭)

உலகெலாம்வளமுற்றுய்யவுப்பர்களுவகையூற
வலகிலாவறவர்வாழவறந்தலையெடுப்பநாளுந்
தொலைவிலாவரமென்மேலுஞ்சுரந்தருள்செய்யுந்தூய
தலைவராஞ்சம்புதாமோதரனயன்றிருத்தாடாழ்ந்து. (௨௮)

எழுந்துகைசிரமேற்கூப்பியிளைஞர்களொடுஞ்சூழ்வந்து
தொழுந்தொறுப்புளகந்துன்னவானந்தத்தோயநோக்கம்
பொழிந்திடவயன்மால்சம்புவெனப்புகழிருப்பேர்பூண்டங்
கெழுந்தருளிறைவர்சீர்சேரத்தெடுத்திசைக்கலுற்றான். (௨௯)

ஆரணத்தொகைகட்கெட்டாயாரணத்துவசப்பெற்றாய்
வாரணத்துரிமேற்போர்த்தாய்வாரணந்தனைமுன்காத்தாய்
பாரணம்விடமாய்க்கொண்டாய்பாரளந்தருள்பாதத்தாய்
தாரணிதுளவமார்பாசம்பரிதாதாபோற்றி. (௩௰)

திருவுறைமார்பாபோற்றிசிவையுறைவாமாபோற்றி
யரவணியணிந்தாய்போற்றியரவிறையணையாய்போற்றி
மரைமலருறைவாய்போற்றிவாணிமின்மருணாபோற்றி
பரமவைகுந்தாபோற்றிபராபரசிவனேபோற்றி. (௩௧)

முளரியங்கண்ணாபோற்றிமுளரியங்கண்ணாபோற்றி
தளமரைத்தவிசாள்சசார்மென்றாளுடையவனேபோற்றி
களமலிகளனேபோற்றிகளங்கனிக்காயாபோற்றி
வளைதனுவரையாய்போற்றிவளர்தனுவானேபோற்றி (௩௨)

பாற்கடற்றூசவெற்புப்பதுமவாதனத்தைப்பார்க்க
மேற்படுமிடமென்றுள்ளம்விழைந்துறைசிவவிதாதா
மாற்றிருமாலேநுங்கண்மலரடிக்கடியனுமென்
றூற்கொடுதிக்கத்தக்கசத்திசற்றேனுமில்லேன். (௩௩)

புரிதருபூசையேற்றுபுன்கண்வாரிதிவீழெம்மைக்
கரைதெரிவுறுத்தியேறக்கருணைசெய்தருள்வீரென்று
திருமுனர்நின்றுசெப்பிச்செவ்வியவருள்பெற்றேகி
மருவலர்ச்செயித்துமண்டலாதிபத்தியம்வாய்த்தானால். (௩௪)

மறைபுகழ்தென்கைலாயவரைத்திரிமூர்த்திதங்க
ளாறுமலரடிகள்போற்றிநடுவன்சேய்ராசரீக
முறுநாறுங்காதைகேட்டோருண்மையும்பொறையுஞ்சீருந்
திறமையுமடைந்துவெற்றிசேர்ந்தரசாட்சிசெய்வார். (௩௫)

ஆக படலம் ௰௭-க்கு திருவிருத்தம் ௯௫௰.

தருமபுத்திரப் படல முற்றிற்று.

---

## ௰௮ - வது புராணங்கேட்குமகிமைப் படலம்.

செப்புமித்தலத்துத்தீர்த்தமேம்பாட்டைச்சேடனுஞ்செப்பிட்
[முடியா
தொப்பிலித்தலத்துமூர்த்திமான்மியத்தையோதும்வல்லமையெவர்க்
[குண்டா

முப்புவனமும் வந்தேத்துமித்தலத்தற்புதங்களுக்கோ முடிவில்லை
இப்பியத்தலத்துத்தமச்சிறப்பனந்தந்தேருதிர்செழுந்தவமுனிவீர்.

இத்தலத்துளநன்னதிபினிற்படிந்துமித்தலத்தெழிற்றவமிழைந்து
மித்தலத்தீசனரியயற்பணிந்துமிலங்குமோதனைபுரிந்து
மித்தலத்திறைவர்மந்திரநியானமியற்றியுந்தானங்களீந்து
மித்தலத்திலங்குநல்லறப்புரிந்துமித்தலவலந்தினஞ்செய்தும். (௨)

வெற்றியும்பதமும்வீடும்பல்வளமும்விஞ்சியபோகமுமேவு
நற்றவர்தொகையுந்தேவர்கடொகையுநவிலுவதெங்ஙனமனந்தங்
கொற்றவர்குழுவுமற்றவர்திரளுங்கூறிடவேண்டுமேன்முடிபெங்
குற்றிடுமவர்தங்காதையுமனந்தமோதவல்லபமெவர்க்குண்டே. (௩)

எல்லவுமெல்லையுறவகுத்தெடுத்திங்கிசைக்குதுமெனவிராசிவ
னெல்லைவல்லமைநாப்பலபடைத்தோதினும்பலகற்பமங்கொருவு
மல்லல்பற்பலவாய்நிறைதிரிமூர்த்திமலைத்தலக்காதைகளெல்லா
மல்லியவண்ணனானவைமுற்றுமறிகுவாருந்தவத்தவரே. (௪)

ஆகலாற்றிரிமூர்த்திப்பருப்பதத்தினழகமைகதையறிவரையி
லோதினேமிந்தச்சிறப்பமைபுராணமுரைத்தவருவகையாய்க்கேட்
[டோர்
காதினுமெழுதக்கழறினோரெழுதுநண்ணியரன்னவர்க்குதவி
யீதலாற்றினவரிவர்பெறும்பலனிற்சிறிதெடுத்தியம்புவாங்கேட்டீர்.

வேறு.

விண்ணவர்குழுவும்பூதமைந்துமேலானகாட்சிப்
பண்ணவர்திரளுமய்யப்பர்திரிமூர்த்திவெற்பி
னண்ணியசிவன்மால்வேதனற்புகழோதுகாதைப்
புண்ணியபுராணமோர்காற்புகன்றிடிற்புகழ்ந்துகேட்கில்.

மந்திரமணிநன்கானமருந்தின்மாமுடல்விஞ்சும்
வெந்திறற்பிணிகளோடுமேன்மையும்புகழுமெய்யு
முந்துநல்லறமுமாசான்மொழியுமாயுளுமொழுக்குஞ்
சந்தமன்னறிவுஞ்செல்வங்கல்வியுந்தானுண்டாமால். (எ)

உண்ணுதற்குயுரைக்கொன்றபாவமுமயலார்க்குற்ற
பெண்ணினையணையவெண்ணும்பாவமும்பிறங்குசோறுங்

தண்ணெனுஞ்சலமுமாதர்தம்மையுந்தாவிச்செல்லு
மண்ணலம்பரியும்விற்றபாவமுமனலார்பஞ்சாம். (௮)

மாலயன்சிவனைநாளும்வணங்கிடாப்பவமுமன்னார்
சீலாற்றொண்டர்சேவைசெயாதநீப்பவமுந்தெய்வக்
கோலவெண்ணீறுடனுருபணிதராக்குற்றத்தாலே
சாலவந்தெய்துபாவமெல்லவுந்தங்காதேகும். (௯)

உரைதிரிமூர்த்திவெற்பையொப்பதோர்தலமுமொண்சீர்
பெருகுமம்மூர்த்திக்கொப்பாமூர்த்தியும்பெரும்பாவங்கள்
கருகருட்டோணிக்கொப்பாந்தீர்த்தமுங்கழறிலிந்த
வொருதிரிபுவனத்துள்ளுமில்லையொண்டவரேயோர்திர். (௰)

ச்சைபெறுஞ்சௌநகாதிதாபதர்தங்கட்கன்பு
மிகுமெழிற்சூதன்மூன்றுமூர்த்திவெற்புப்புராண
மகமகிழ்ந்தோதிபாரியறைந்தருள்வியாசவாசான்
புகழ்புகுபாதப்போதுபோற்றித்தோத்திரஞ்செய்தானால். (௰௧)

வேறு.

அங்கையாமலகத்தங்கவங்கனியிலழகியதென்கயிலாய
மங்களாகரமான்மியமுழுதும்வழுத்திடக்கேட்டமாதவர்க
டங்குமாதரத்தாற்சூதனைப்பூசைதான்புரிந்திருகரங்கூப்பி
யிங்குநீயுரைத்தவருமறைப்பொருள்கேட்டெம்பவமிரிந்தனமெனரூர

அருந்தவத்தரசேயடைந்தவர்க்காக்குமையனேயரனரியயனே
பொருந்துதற்பரமென்றுணர்ந்துபூசிக்கும்புண்ணியவுத்தமப்பொரு
[ப்பேயே
வருந்துவெம்பிணியையாற்றுசற்குருவேமாசறுகீர்த்திவாரிதியே
மருந்துறழ்வசனச்சூதமாதவனேயெனத்துதித்துவகைவாய்ந்தாரால்

வேறு.

அருமறைவாழ்கவேதனரியரனையர்வாழ்கத்
திருமலைக்கலைமானென்னுஞ்செல்வனையர்கள்வாழ்கத்
திரையறைதோணிபாறென்றெனுந்தீர்த்தம்வாழ்கப்
பொருவருந்திரிமூர்த்திப்பேர்ப்பொருப்பெழில்பூத்துவாழ்க.

அத்திரிமுனிவன்வாழ்கவணருஞ்சுனைப்பண்ணைவாழ்
வுத்தமச்செல்வியூருபொண்டளிகருப்வாழ்க
முத்தமிழ்வாழ்கமூவர்முளரியந்தாட்கட்டொண்டு
வைத்தவாகிப்போற்றுவார்கணோஞளும்வாழ் (௰௫)

ஆக படலம் ௪௮ - க்கு திருவிருத்தம் ௲௪௱௩

புராணங்கேட்குமகிமைப் படல முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்,

திரிமூர்த்திகடிருவடிகளே சரணம்.

திரிமூர்த்திமலைப் புராணம்

முற்றிற்று.



# பிழை திருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௰௯ | ௫௮ | ௩ | னிரை | னிறை |
| ௸ | ௬௰ | ௧ | விவள | விள |
| ௸ | ௬௩ | ௪ | ங்கடகை | கடங்கை |
| ௩௨. | ௨ | ௨ | வெற்றினி | வெற்பினி |
| ௪௨. | ௰௮ | ௨௩௪ | | குதவு-மெது-விதி |
| ௪௯ | ௬௭ | ௪ | றதுரு | றநுரு |
| ௫௬ | ௪௫ | ௧ | யாற்று | யாற்றுறு |
| ௫௭ | ௪௯ | ௩ | தாரு | தாகு |
| ௬௫ | ௱௰௨ | ௨ | பவங்கப் | பவங்க |
| ௬௬ | ௨ | ௧ | பயம்பிணைராணி | மணையம்பிராணி |
| ௭௫ | ௰௭ | ௩ | திருணை | திகுணை |
| ௸ | ௨௩ | ௨ | சிலம்புபத் | சிலம்புபப்பத் |
| ௭௮ | ௪௨ | ௩ | நயசெனி | நயசெயனி |
| ௭௯ | ௪௮ | ௪ | லாலா | லாசிலா |
| ௮௰ | ௫௯ | ௧ | நற்றவமோ | நற்றவமே |
| ௸ | ௸ | ௧ | ரத்தினமோ | ரத்தினமே |
| ௸ | ௸ | ௧ | பாக்கிசமோ | பாக்கிசமே |
| ௸ | ௸ | ௨ | வைபவமோ | வைபவமே |
| ௸ | ௸ | ௨ | மாநில | மானில |
| ௸ | ௸ | ௩ | திடற்கென் | திடவென் |
| ௮௨. | ௭௨ | ௧ | படைக்ரை | படைக்கை |
| ௯௰ | ௨௫ | ௧ | பிச்சைரு | பிச்சைதரு |
| ௯௧ | ௩௩ | ௧ | மெண்ணை | யெண்ணை |
| ௱௪ | ௧ | ௨ | பொகுவி | பொருவி |
| ௱௰௧ | ௪௫ | ௪ | நாடொரு | நாடொறு |
| ௱௰௩ | ௬௧ | ௨ | றன்னை | றனை |
| ௸ | ௬௩ | ௧ | விடுந் | விடுத் |
| ௸ | ௬௩ | ௩ | னகுறை | நறை |
| ௱௰௪ | ௩ | ௩ | நாலல் | நல் |
| ௸ | ௬ | ௪ | ளொதி | ளெதி |

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௱௰௫ | ௮ | ௪ | கமல் | கமழ் |
| ௸ | ௰ | ௧ | ணிரிமை | ரிண்மை |
| ௸ | ௰௨ | ௨ | தெழூங் | தெழூத் |
| ௱௰௬ | ௰௬ | ௪ | தொண் | றுண் |
| ௸ | ௰௭ | ௧ | பாச | பாக |
| ௸ | ௰௯ | ௨ | மூண்டா | மூண்ட |
| ௱௰௭ | ௨௧ | ௪ | தின்றி | னின்றி |
| ௸ | ௨௬ | ௩ | லுண்ணு | லுண்ணு |
| ௱௰௮ | ௩௨ | ௨ | வ்திதி | வ்விதி |
| ௱௰௮ | ௩௩ | ௩ | மலர்து | மலர்த்து |
| ௸ | ௩௪ | ௧ | யானிவச | யானிசை |
| ௱௰௯ | ௩௫ | ௪ | தேற்ற | தேட்ட |
| ௱௨௰ | ௫ | ௧ | ரிடத | நிடத |
| ௸ | ௮ | ௩ | பூவனை | பூவணை |
| ௱௨௰௬ | ௨௬ | ௨ | நல்லல | நல்ல |





திருமூர்த்தி சுவாமிகள்.